

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்
24-வது மகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

உ

திருச்சிற்றம்பலம்

# புள்ளிருக்குவேளூர்த் தலவரலாறு

418

இஃது

இவ்வாலய பரம்பரைத் தருமகர்த்தா

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீன

24-வது மகா சந்நிதானம்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த**

**பரமாசாரிய சுவாமிகளின்**

திருவுள்ளத்தின்படி

வைத்தீஸ்வரன்கோயில் (வேளூர்)

ஸ்ரீ வைத்தியநாத சுவாமி தேவஸ்தானத்தில்

வெளியிடப்பெற்றது.

1943 [விலை அணா 2.

# பொருளடக்கம்

திருச்சிற்றம்பலம்

# புள்ளிருக்குவேளூர்த் தலவரலாறு

## 1. தலமும் இருப்பிடமும்

தன்னடைந்தார்க்கு இன்பங்கள் தருவானாகிய இறைவன் தீராநோய் தீர்த்தருளும் பொருட்டு மந்திரமும் தந்திரமும் மருந்துமாகி, ஸ்ரீ வைத்திய நாதர் என்னும் திருப்பெயருடன் திருமேனி தாங்கி எழுந்தருளியிருக்கும் தலம் **திருப்புள்ளிருக்கு வேளூர்** என்பதாகும். அது சோணாட்டில் தஞ்சை ஜில்லா சீகாழி தாலூகாவில் காவிரியின் வடபால் உள்ளது. தென்னிந்திய இருப்புப்பாதையில் வைதீசுவரன்கோயில் என்னும் பெயருடன் ஒரு புகைவண்டி நிலையமாகவும் அமைந்துள்ளது. தல யாத்திரை செய்வோர் தங்குவதற்கு வசதியாகப் பல சத்திரங்களும், மடங்களும் இருக்கின்றன.

## 2. தலப்பெயர்கள்

புள் (ஜடாயு), இருக்கு (இருக்குவேதம்), வேள் (முருகன்), ஊர் (சூரியன்) என்ற நான்கும் பூசித்தமையால் **புள்ளிருக்கு வேளூர்** எனவும், சடாயு பூசித்தமையால் **சடாயுபுரி** எனவும், வேதம் பூசித்

தமையால் **வேதபுரி** எனவும், கந்தன் பூசித்தமையால் **கந்தபுரி** எனவும், சூரியன் பூசித்தமையால் **பரிதிபுரி** எனவும், அங்காரகன் பூசித்தமையால் **அங்காரகபுரம்** எனவும், அம்பிகை பூசித்தமையால் **அம்பிகாபுரம்** எனவும் பல பெயர்கள் உள்ளன. இவையன்றி வினைதீர்த்தான்கோயில், தையனாயகி கோயில், **வைத்தீசுவரன்கோயில்** முதலானபற்பல பெயர்களும் இத்தலத்திற்கு வழங்கப்படுகின்றன.

## 3. கோயிலமைப்பு

ஆலயம் நகரின் நடுவே நாற்புறமும் உயர்ந்த சுற்று மதில்களால் சூழப்பட்டு மிக அழகாக விளங்குகிறது. கீழ்ப்புறமும் மேற்புறமும் முன் பக்கம் இராஜகோபுரமும் பின்பக்கம் கட்டகோபுரமும் விளங்குகின்றன. தெற்கும் வடக்கும் சாதாரண வாயில்கள் இருக்கின்றன. ஆலயத்திற்குள் இரண்டு பெரிய சுற்றாலைகளும், மதிலின் வெளிப்புறம் மடவிளாகமும் அமைந்திருக்கின்றன. அம்மையாரையும் இறைவனையும் வலம் வருதற்குத் தனித்தனி சுற்றாலைக ளிருக்கின்றன. ஸ்ரீ வைத்திய நாதர் சந்நிதானம் மேற்கு நோக்கியும், தையனாயகி அம்மையாரின் சந்நிதானம் தெற்கு நோக்கியும் உள்ளன.

ஆலயத்தின் கீழ்த்திசையில் வைரவக்கடவுளும், மேற்றிசையில் வீரபத்திரக்கடவுளும், தென்றிசை

யில் கற்பகவிநாயகரும், வடதிசையில் காளியும் அமர்ந்து காவல் புரிகின்றனர். இதனை,

"தெற்கிற் கணேசன் திகழ்மேற்கிற் பைரவனுந்
தொக்க வடக்கிற் றொடர்காளி—மிக்ககிழக்
குள்ளிருக்கும் வீரனையும் முற்றுப் பணிந் துய்ந்தோம்
புள்ளிருக்கு வேளூரிற் போய்"

என்னுந் தனிப்பாடற் செய்யுளான் உணரலாகும்.

மேலக் கோபுரவாயில் வழியாக ஆலயத்தினுட் சென்றால் வெள்ளியாலும் தங்கத்தாலும் இரு துவஜஸ்தம்பங்கள் உள்ளன. மேற்கு வெளிப் பிராகாரத்தின் கீழ்புறம் குமரகுருபரர் என வேளூர்ப் புராண ஆசிரியரால் போற்றப்பெற்ற ஆறுமுககுமாரர் கர்ப்பக்கிரகம் அமைந்துளது. தென்புறம் தற்போது சந்தனக்குழம்பு மண்டபம் என வழங்கும் ஆஸ்தான (அலங்கார) மண்டபம் அமைந்துளது. வடக்கு கிழக்குப் பிராகாரங்களில் திருமாளிகைப்பத்தி மண்டபங்கள் அமைந்துள்ளன. வடக்குப்பிராகாரத்தில் சுவாமி கோயிலை ஒட்டி ஆவுடையம்மன் என்னும் பத்ரகாளியம்மன் கோயில் உளது. கிழக்குத் திருமாளிகைப் பத்தியில், காரியாலயம் உளது. இப்பிராகாரத்தில் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரர் சந்நிதிக்கு ஒரு சிறுகட்டைக் கோபுரம் அமைந்துளது. இக்கட்டைக் கோபுரத்தின் தென்புறம் ஜுரஹரேசுவரர், நவக்கிரக மண்டலம், கிழக்கு முகமாக தண்டாயுதபாணி, தெற்கு முகமாக அங்காரகன் திருவுருவங்கள் (மூலவர்) எழுந்தருளி உள்ளன.

கீழைப் பிராகாரத்தின் கீழ்பால் தலவிருக்ஷம், வேம்பு இருக்கும் வேம்படிமால் உளது. இது தான் ஆதிவைத்தியநாதபுரி என வழங்கப்பெறுவது. அதற்குச் செல்லும் கட்டைக் கோபுரத்தை ஒட்டி ஆதிபுராணேசுவரர், வீரபத்திரர் திருவுருவங்கள் உள்ளன. மடைப்பள்ளியில் மேற்கு முகமாக அன்னபூரணி அம்மன் திருவுருவம் அமைந்துளது. தெற்குப் பிராகாரத்திற்குத் தெற்கில் அம்மன் சந்நிதியில் சித்தாமிர்த தீர்த்தம் இருக்கிறது. அத்தீர்த்தத்தில் நாற்புறமும் அழகியதிருமாளிகைப் பத்தி மண்டபங்கள் அமைந்திருக்கின்றன.

சுவாமி சந்நிதியிலுள்ள கொடிமரங்களின் வடபால் முதலில் பள்ளியறையும், அதற்கடுத்து சுக்கிர வார அம்மன் உத்ஸவரும், அதற்கடுத்து ஸ்ரீ தையலுயகியின் கோயிலும் அமையப்பெற்றிருக்கின்றன. சுவாமி சந்நிதிக்குச் செல்லும் முதல் வாயிற்படியில் இருபுறமுள்ள குடவறைகளில் வடக்கில் அதிகாரநந்தி உத்ஸவரும், தெற்கில் சடாயு உத்ஸவரும் எழுந்தருளி இருக்கின்றனர். உட்பிராகாரத்தில் சுவாமி சந்நிதிக்கு மேற்புறம் ஸ்ரீ செல்வ முத்துக்குமாரசுவாமி உத்ஸவர் வள்ளி தெய்வயானையோடும் எழுந்தருளி யிருக்கின்றார். அடுத்தாற்போல் கஜலக்ஷ்மியும் அஷ்டலக்ஷ்மியும் உள்ளனர். வடக்குப்பிராகாரத்தில் ஸ்ரீமந் நடராஜ மூர்த்தி ஸ்ரீசிவகாமி அம்மையோடு எழுந்தருளி இருக்கின்றார். இப்பிராகாரத்தில் சுவாமி கர்ப்பக்

கிரகத்தில் வடக்கு முகமாக எழுந்தருளியுள்ள துர்க்கை மகிமை மிக்கவர். கீழைத் திருமாளிகைப் பத்தியில் சூரியன், அங்காரகன் நீங்கலாக நவக் கிரகங்கள் அமைந்துள்ளன. தெற்குப் பிராகாரத்தில் அறுபத்து மூவர் மூலவர்களும், சப்த கன்னிகைகளும் அமைந்துள்ளனர். இவையன்றி சடாயு குண்டம்" என்ற ஒன்றும் (இராமர் சடாயுவைத் தகனம்செய்த இடம்) உளது. அக்குண்டத்தின் மேல் இராம இலக்குவர்கள், விஸ்வாமித்திரர், வசிட்டர், சடாயு முதலிய திரு உருவங்களும் உள்ளன. சட்டைநாதர் (சுதை) கட்டுமலையின் மேல் தென்முகமாக உளது. அடியில் தென்முகக் கடவுளும், மேற்புறம் சட்டைநாதர் மூலவரும், கீழ் புறம் சண்டிகேசுவரர் திருவுருவமும் அமைந்துளது. சடாயு குண்டத்திற்கு அடுத்தாற் போல் உள்ள வாயிலைத் தாண்டிச்சென்றதும் எதிரில் கிழக்கு முகமாக சோமாஸ்கந்தர் (நாயகர்) சந்நிதியுளது. தென்புறம் சிங்காரவேலவர், ஐயனர், பிடாரி, மாரியம்மன், திரௌபதையம்மன், கங்காளர், கங்காவிசர்ஜனர், பிக்ஷாடனர், பிரதோஷ நாயகர், நால்வர், சண்டீசர், அங்காரகன் முதலிய உத்ஸவ மூர்த்திகள் வைக்கப்பெற்றிருக்கின்றன.

## 4. மூர்த்திகள்

இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவர் திருநாமம் **ஸ்ரீ வைத்தியநாதர்.** அம்மையார் திரு

நாமம் **ஸ்ரீதையநாயகி.** முருகப்பெருமான் திரு நாமம் **ஸ்ரீசெல்வமுத்துக்குமாரர்.** இப்பெருமானே, "எவ்வாறு துதிப்பேன்" என்று மயங்கிய அருட் புலவராம் குமரகுருபரஅடிகளுக்கு "பொன்பூத்த குடுமி" என அடியெடுத்துக் கொடுத்துப் பாடும்படி அருள் செய்தார். மேலும் இத்தலத்தில் நவக் கிரகங்கள் வரிசையாக அமையப் பெற்றிருக் கின்றன. கோள்வலியற்ற இடங்களிலேதான் இவ்விதம் நவக்கோள்களும் ஒரே வரிசையில் அமைக்கப்பெறுவது. இங்கு அங்காரகனுக்குப் பெருமை அதிகம். இது **அங்காரக க்ஷேத்திரம்.**

## 5. தலப்பெருமை

முத்துக்குமாரசுவாமி சூரன் மார்பைப் பிளக்க வேல் வாங்கியதும், தன்னிடத்து வசிக்கும் உயிர்கள் இயமலோகம் அடையப் பெறாததும், பிடித்த பேய்கள் ஓடப்பெறுவதும், இறைவன் நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டு வியாதிகளையுந் தீர்க்கத் திருவுளங்கொண்டு தையனாயகியம்மையார் தைலபாத்திரமும், சஞ்சீவியும், வில்வமரத்துஅடிமண்ணும் எடுத்துக்கொண்டு தம்முடன்வர வந்து வைத்தியராகி அருள் செய்திருக்கப்பெற்றதும், அறுசுவையோடுகூடிய உணவை அடியார்களுக்கு உண்பித்து மாகேசுரபூசை செய்யப்பெறுவதும், பிறந்தாலும் இறந்தாலும் போகமோட்சங்களைக் கொடுப்பதுமாகிய பெருமையினையுடையது இத்தலம்.

**நேத்திரப்பிடிசந்தனம்:-** ஸ்ரீ செல்வமுத்துக் குமாரருக்கு அர்த்தயாமபூஜையில் சாத்தப்படுவது. அணிபவர்களுக்கு வேண்டிய பயன்களைக் கொடுக்க வல்லது.

**சடாயுகுண்டம்:-** சடாயுவின் வேண்டுகோட் படி இராமபிரான் இத்தலத்தில் (விபூதி குண்டத்தில்) சிதையடுக்கிச் சடாயுவின் உடலைவைத்துத் தகனஞ் செய்ததனால் இப்பெயர்பெற்றது. சிவபுராணத்தைப் பராமுகமாகக் கேட்டதினால் வீரசேனனென்னும் அரசனுக்கு ஏற்படவேண்டிய கயரோகநோய் அவனைப்பற்றாது அவன் புதல்வனாகிய சித்திரசேனனைப்பற்ற, அவ்வரசன் குருவாணைப்படி இத்தலத்துவந்து நீராடி இறைவழிபாடியற்றி இக்குண்டத்திற்கு அதிரசம், வடை முதலியன நிவேதித்து, வேதிகையும் பொன்னால் செய்து முடித்து, குண்டத்திலுள்ள நீற்றை எடுத்துத் தானும் அணிந்து தன்புதல்வனுக்கும் அணிவிக்கப் புதல்வனும் நோய் நீங்கப்பெற்றான். இன்றும் அக்குண்டத்திலுள்ள நீற்றினை இட்டுக் கொண்டு பலரும் பலவிதமான பிணிகளும் நீங்கப் பெறுகிறார்கள்.

**திருச்சாந்துண்டை:-** இது வைத்தியநாதரிடத்தில் நோய்நீக்கம்பெறுவான் வேண்டிப்பெறும் மாத்திரை. இதனைச் செய்து உண்ண விரும்புவோர் சுக்கில பக்கத்தில் நன்னாழிகையில் அங்கசந்தான தீர்த்தத்தில் நீராடி, நடுவிலுள்ள மிருத்திகையை

எடுத்து, புதுப்பாத்திரத்தில் வைத்துக்கொண்டு ஆலயத்திற்கு வந்து, விபூதிகுண்டத்திலுள்ள விபூதியையும் சித்தாமிர்ததீர்த்த நீரும் அதனுடன் கலந்து பஞ்சாக்கரம் செபித்துக்கொண்டே பிசைந்து, முத்துக்குமரர் திருமுன்புள்ள குழியம்மியிலிட்டு அரைத்து, கடுகளவாக உருண்டைகள்செய்து, அம்மையார் திருவடியில்வைத்து அருச்சித்த பின்னர், முறைப்படி இறைவழிபாடியற்றி உருண்டையை சித்தாமிர்த தீர்த்தத்தோடு நியமமாக கலந்து உண்ணல் வேண்டும். அவ்வாறு உண்பவர்கள் தீராதவினைகளெல்லாம் தீர்ந்து முத்தியின்பத்தை யடைவர்.

"விண்மருந் துதிக்கும் மண்மருந் தருந்தியும்"
"வினை தீர்த்த பெருமான் பக்கல் மண்ணுண்டு"
"வந்தவந்த பேர்களுக்கு மண்மருந் தளிக்கிறீர்"
"ஒருண்டை மண்ணை யுண்டால் ஐயிரண்டு
பிறப்பு மவர்க்கொழிக்கலாமே"
"வாயிலே மண்போட்டு வாங்குவர்காண் அம்மானே"

என்பன இவ்வூர்க்கலம்பகச் செய்யுட் பகுதிகள்.

## 6. தீர்த்தங்கள்

இத்தலத்தில் பதினெட்டு தீர்த்தங்கள் உள்ளன.

**1. சித்தாமிர்த தீர்த்தம்:-** இதுவே எல்லாத் தீர்த்தங்களிலும் முதன்மையானது. அம்மையார்

சந்நிதானத்தில் இருக்கின்றது. கிருதயுகத்தில் காமதேனு இத்தலத்துவந்து தனது முலைக்குடப் பாலால் இறைவரது திருமுடியில் அபிஷேகிக்க அப்பால்பெருகிக் கலந்தமையால் **கோக்ஷீரதீர்த்தம்** என்றும், திரேதாயுகத்தில் சிவனடியாரொரு வருக்குக் கருப்பஞ்சாறுபோல இனித்ததால் **இக்ஷு சாரதீர்த்தம்** என்றும், துவாபரயுகத்தில் சடாயு பல கால் மூழ்கி வழிபட்டமையால் **சடாயு தீர்த்தம்** என்றும் பெயர் வழங்கப்பட்டன. இக்கலியுகத்தில் சித்தர்கணம் இறைவர் திருமுடியில் தேவாமிர்தத் தால் அபிஷேகித்தபோது அவ்வமிர்தம் இதிற் கலந்தமையால் **சித்தாமிர்த தீர்த்தம்** என்று பெயர் வழங்கப்படுகிறது. சுந்தரனென்னும் அந்தண னொருவனுக்கு ஏற்பட்ட வெண்குட்டமும், அங் காரகனது செங்குட்டமும் நீக்கியது. பிராயச்சித் தத்தாலும் தீராத சிவத்துரோகம் செய்த தக்க னுக்கு உடலும் தலையும் ஒன்று சேரும்படிச் செய் தது.

சதானந்தர் என்னும் முனிவர் இதில் நீராடித் தியானம் செய்யுங்கால் பாம்பால் துரத்தப்பட்ட தவளை ஒன்று அவர்மீது பாய்ந்து அவரது தியானத்தைக் கலைத்தது. முனிவர் கோபித்து "இத்தீர்த்தத்தில் எக்காலமும் தவளை களும் பாம்புகளும் இல்லாது ஒழியக்கடவது" என்று சாபமிட்டார். இன்றளவும் தவளை முதலியன இல்லாமல் இருப்பது காணத்தக்கது. இத்தீர்த்

தத்தின் மகிமையைப் பற்றி "வற்றாச் சித்தா மிர்தத்தடத் தீர்த்தத் துறைக்குறும் திவலை யொன்றே யமையும்" எனக் குமரகுருபரரும் அருளியிருத்தல் காண்க.

மேலும் இதன்சுற்றில் கிழக்குமுதலாக எட்டுத் திக்குகளிலும் இந்திர தீர்த்தம், பத்தி தீர்த்தம், சர்வ தீர்த்தம், முத்தி தீர்த்தம், பிறைகை தீர்த்தம், மங்கள தீர்த்தம், ஞான தீர்த்தம், துர்வாச தீர்த்தம் என்ற எட்டு தீர்த்தங்கள் விளங்குகின்றன. இவ் வெட்டும் தன்னிடத்து மூழ்குவோர்க்கு முறையே அட்டசித்திகளையும் கொடுக்க வல்லன. இவ்வெட் டிலும் அட்டவசுக்களும், எட்டு முனிவர்களும் நீராடிப் பல பேறுகளும் பெற்றிருக்கின்றனர். இவைகள் ஒவ்வொன்றுக்கும் அதிதெய்வங்களும், காவற் கடவுள்களும், விருட்சங்களும் தனித்தனியே தலபுராணத்தில் விரிவாகக் கூறப்பட்டிருக் கின்றன.

2. கோதண்ட தீர்த்தம்:- தென்மேற்கு மூலை யில் இருக்கிறது. இதற்கு அதிதெய்வம் இராமர். காவற்கடவுள் இலக்குவர். விருக்ஷம் வன்னி. துசீலன் என்னும் சித்தன் இதன் கரையில் வசித்து வந்தமையால் சித்ததீர்த்த மென்று முன்னர்ப் பெயர்பெற்று விளங்கியது. மேற்கூறிய துசீலன் செய்த பாபத்தால் உண்டான குமர கண்டவலி என்னும் நோயை நீக்கியதும் இத்

தீர்த்தமேயாம். இராமபிரான் சீதாபிராட்டியா ரோடும், தம்பி இலக்குவரோடும் வனவாசஞ் செய்யுங்கால் இத்தலத்தை யடைந்து இதில் நீராடி இறைவனை வழிபட்டுத் தன்குலத்துப் பிதிரர்களுக் கும், இராவணனால் சிறகரியப்பட்டு இறந்த சடாயு வுக்கும் தருப்பணம் செய்தமையால் இராமதீர்த்தம் எனப் பின்னர் பெயர் பெற்றது. பங்குனி உத்தரத் தில் ஸ்ரீமந் நடராஜப்பெருமான் இதில் தீர்த்தங் கொடுத்தருளுவர். பிரார்த்தனைக்காக முடி எடுக்க வருபவர்கள் முடி எடுத்தவுடன் இதில் நீராடி அதன் பின்னரே சித்தாமிர்த தீர்த்தத்திற்குச் செல்வார்கள்.

3. **கௌதமதீர்த்தம்:-** இது இராமதீர்த்தத் திற்கு அருகில் தென்கீழ்த் திசையில் விளங்கு கிறது. இதற்கு அதிதெய்வம் வாயுபகவான். காவற்கடவுள் சந்திரன். விருட்சம் மாமரம். கௌதமரால் உண்டாக்கப்பட்டது.

4. **வில்வதீர்த்தம்:-** ஆலயத்திற்கு வடக்கே விளங்குகிறது. இதற்கு அதிதெய்வம் இந்திரன். காவற்கடவுள் தண்டபாணி. விருட்சம் வில்வமரம். வில்வமரங்களால் சூழப்பெற்றமையால் இப்பெயர் பெற்றது. இதனை உண்டாக்கினோர் விசுவதேவர் கள்.

5. **முனிவர்தீர்த்தம்:-** கீழவீதிக்குக் கிழக்கே யுள்ளது. அதிதெய்வம் சந்திரசேகரர், காவற்

கடவுள் கருடன். விருட்சம் ஆலமரம். காற்கியன், காசிபன் முதலிய முனிவர்கள் எழுவரும் நீராடித் தவம் செய்தமையால் இப்பெயர் பெற்றது. தக்கனின் தலையை அறுத்த வீரபத்திரர் இதில் நீராடி தன்னைப் பற்றித் துன்புறுத்திய வீரகத்தியைப் போக்கி இறைவரை வணங்கி கீழைக்கோபுர வாயிலில் துவாரபாலகராய் விளங்குகின்றார்.

6. **அங்கசந்தானதீர்த்தம்:-** இது வடகீழ்த் திசையி லுள்ளது. அதி தெய்வம் வயித்தியநாதர். காவற்கடவுள் அஸ்திரதேவர். விருட்சம் விளா. தாரகனோடு போர்செய்து மூர்ச்சித்துக் கிடந்த தேவர்களைக்காக்க இறைவன் தன் சூலத்தால் தீர்த்தமுண்டாக்கித் தேவர்களது சிதைந்த அங்கத்தை அத்தீர்த்த நீரில் நனைத்துப் பொருந்தச் செய்தமையால் இப்பெயர் பெற்றது. சிவதன்மன் என்னும் பிராமணன் தான் செய்துவந்த கொடிய பாவங்களால் பிர்மராக்ஷசாய்ப் பிறந்து இத்தீர்த்த நீர் பட்டமாத்திரையே முன்னைய வடிவுபெற்றான்.

மற்றையன:— ஆதிகாவிரி தீர்த்தம், கபில தீர்த்தம், சூரிய தீர்த்தம், சூல தீர்த்தம், சேட தீர்த்தம், சோம தீர்த்தம், தக்க தீர்த்தம், பராசர தீர்த்தம், பிரம தீர்த்தம், மிருதசஞ்சீவன தீர்த்தம், வித்தியாதர தீர்த்தம் என்பனவைகளாம். இத்தீர்த்தங்களில் மூழ்கும் முறையும், நாளும், அதனல் உண்டாகும் பலனும் தலபுராணத்திற் கண்டு கொள்க.

## 7. தலவிருட்சம்

இத்தலம் கிரேதாயுகத்தில் கதம்பவனம் என்றும், திரேதாயுகத்தில் வில்வவனம் என்றும், துவாபரயுகத்தில் வகுளவனம் என்றும், கலியுகத்தில் நிம்பவனம் என்றும் பெயர்பெற்று விளங்குவதாகவும், முதல் யுகத்திலுள்ள கடம்ப விருட்சமே மற்றைய மூன்று யுகத்திலும் முறையே வில்வம் முதலிய விருட்சங்களாகத் திரிந்தன என்றும் புராணங் கூறுகின்றது. இப்பொழுது வேம்பு தலவிருட்சமாக உள்ளது. இது கீழக் கோபுரவாயிலின் உட்புறம் இருக்கிறது. இதனை மக்கள் **வேம்படிமால்** என வழங்குகின்றார்கள். இதனடியில் ஆதிவைத்தியநாதர் எழுந்தருளியிருக்கின்றார்.

## 8. வழிபட்டோர்கள்

சடாயு, வேதம், முருகன், ஆதித்தன், அங்காரகன், பிரமன், சதானந்தர், இராமர், கலைமகள், பூமகள், துர்க்கை, சிவசன்மன், துருவாசன், பராசரர் முதலியோர் வழிபட்டுப் பலபேறுகளைப் பெற்றுள்ளார்கள்.

## 9. சுற்றுக்கோயில்கள்

இத்தலத்தின் நான்கு தெருக்களிலும் விநாயகர் ஆலயங்கள் பல இருப்பதோடு தெருக்களின்

புறம்பே ஐயனுர், பிடாரி, மாரியம்மன் முதலிய சிறு தெய்வங்களுக்கும் ஆலயங்கள் ஏற்பட்டுள்ளன. இவ்வாலயங்களெல்லாம் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி ஆலய நிர்வாகத்திற்குட்பட்டனவே. மருவத்தூரி லுள்ள ஆலயமும் இத்தேவஸ்தான நிர்வாகத்துக் குட்பட்டது.

## 10. மண்டபங்கள்

ஆஸ்தானமண்டபம், அலங்கார மண்டபம், சித்திரமண்டபம், வசந்தமண்டபம், தீர்த்தவாரி மண்டபம், களஞ்சியமண்டபம் முதலிய பல மண்ட பங்கள் இவ்வாலயத்திலுள்ளன. சுவாமிசந்நிதி தட்டம்சுற்றி மண்டபமே தற்போது **ஸ்ரீ சண்முக விலாசப் பிரசாரசபா மண்டபம்** என வழங்கப் படுகிறது. இம்மண்டபத்தில்தான் சொற்பொழிவு கள் நிகழ்த்தப்பெறுகிறது. களஞ்சிய மண்டபத் தில் தேவஸ்தான காரியாலயமும், நூல்நிலையமும் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன.

## 11. சிற்பங்கள்

பழய பல்லவர்கள் காலத்து வேலைப்பாடுகளும், மராட்டியர் காலத்து வேலைப்பாடுகளும் காணப் படுகின்றன.

## 12. நித்திய பூஜைகளும், திருவிழாக்களும்

நாடோறும் காமிக ஆகமவிதிப்படி ஆறுகால பூஜைகள் நடைபெறுகின்றன. பிர்மோற்சவம் பங்குனித்திங்களில் நடைபெறும். அதில் ஐந்தாந் திருநாளன்று ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி ஸ்ரீ வைத்தியநாதரைப் பூசித்துச் செண்டு பெறும் காட்சி மிகச் சிறப்பானது. பிர்மோற்சவத்தில் கங்காவிசர்ஜனருக்கும் உத்சவமுண்டு. ஸ்ரீ செல்வ முத்துகுமார சுவாமிக்கு தைத்திங்களில் திருவிழா நடைபெறுகிறது. கடைசிச்செவ்வாயன்று தீர்த்த வாரி நிகழ்த்தப்படும். செவ்வாய்க் கிழமைகளிலும் மக்கள் கூட்டமாகவந்து சித்தாமிர்த தீர்த்தத்தில் மூழ்கி சுவாமிதரிசனம் செய்து போவார்கள். உத்சவகாலங்களில் சுவாமி எழுந்தருளும்போது கயிலையில் சோமாஸ்கந்தர் எழுந்தருளியிருப்பதே போன்று நடுவில் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரர் எழுந் தருளிவர சுவாமி ஓர்புறமும் அம்மையார் மற்றொரு புறமும் எழுந்தருளுவார்.

திங்கள்தோறும் வரும் கார்த்திகைத் திரு நாட்கள், கந்தர்சஷ்டி போன்ற விசேட நாட்களில் தான் செல்வமுத்துக்குமரருக்கு அபிடேகம் நடை பெறும். மற்றைய நாட்களில் செல்வமுத்துக்குமா ரரின் ஆத்மார்த்த பூஜாமூர்த்தியான ஸ்ரீமுத்து லிங்கத்திற்குத்தான் அபிடேகம் நடைபெறும். ஏனையதலங்கள் போலாது, அர்த்தயாம பூசாகாலத்

தில் முதலில் ஸ்ரீ செல்வமுத்துக் குமாரருக்கு வழிபாடு நடந்த பின்னரேதான் சுவாமிக்கு நடை பெறும். இதற்குத்தான் புழுகாப்பு என்றுபெயர். இப்புழுகாப்பு தரிசனந்தான் இத் தலத்திற்குச் சிறப்புமிக்கது.

அங்காரக க்ஷேத்திரமானதால் செவ்வாய்க் கிழமைதோறும் மாலையில் ஆட்டுக்கிடாவாகனத் தில் அங்காரகன் எழுந்தருளியாகிப் பிராகாரத்தில் வலம் வருவார்.

இவைகளன்றியும் அம்மையாருக்கு ஆடிப்பூரம் நவராத்திரி உற்சவங்களும், பிறவும் நடைபெற்று வருகின்றன.

## 13. சொத்துக்கள்

இத்தேவஸ்தானத்திற்கு நன்செயில் சுமார் 6105·28 ஏக்கரும், புன்செயில் 1176·12 ஏக்கரும் இருக்கின்றன. அன்றியும் 20 வீடுகளும், கடை களும் இருக்கின்றன. யானை ஒன்று இருக்கின் றது. இத்தேவஸ்தானத்தில் மூன்று திருத்தேர் கள் உள்ளன. வெள்ளியில் இரதம், மஞ்சம் (விமானம்), இடபங்கள் மூன்று, இடும்ப வாகனம், மயில் வாகனம், பல்லக்கு, சிலஎடுபிடிகள் உள்ளன.

***திருவாபரணங்கள்:—*** திருவாபரணங்கள் சுமார் ரூ. 1,60,750 மதிப்புள்ளவை இருக்கின்றன.

24-வது மகாசந்நிதானமாக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக பரமாசாரிய சுவாமிகள் அருளாட்சி ஏற்றபின்னர் வள்ளியம்மைக்கு சுமார் ரூ. 5000 மதிப்புள்ள கல்லிழைத்த கிரீடம் ஒன்றும், ஆறுமுக குமாரருக்கு ரூ. 1500 மதிப்புள்ள வெள்ளிக் கவசம் ஒன்றும், ஸ்ரீ சோமாஸ்கந்தருக்குச் சுமார் ரூ. 2500 பொறுமானமுள்ள வெள்ளிப்பார்வைத் தகடு ஒன்றும், ஸ்ரீ செல்வமுத்துக்குமார சுவாமிக்குச் சந்தனக்குழம்பாகும் வெள்ளி ஸ்தானவேதி ஒன்றும் செய்துவைக்கப்பட்டன. வாலாம்பிகையம்மையாருக்கு நாற்பத்திமுக்கோணத் தாடங்கம் என்னும் திருவாபரணம் ஒன்றும் இருக்கிறது. இது ஒரு பழங்காலத் திருவாபரணம்.

## 14. திருப்பணி

"வினையற்ற கோயில் விளக்கழகு" என்பது பழமொழி. இப்பழமொழிப்படி இவ்வாலயத்தில் விளக்குகள் அதிகம். அதோடு மின்சார விளக்குகள் பல ஆலயத்தின் எல்லா இடங்களிலும் போடப்பட்டிருக்கின்றன.

தற்போது தருமையாதீனத்தில் அருட்செங்கோல் நடத்திவரும் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களால் 1939-ம் ஆண்டில் சுவாமி, அம்மன், செல்வமுத்துக்குமாரர்,

அறுபத்து மூவர்களுக்கும் மருந்துசாத்திக் கும்பா பிஷேகம் நடத்தப்பெற்றது.

ஆதீனகர்த்தரவர்கள் சுவாமிசந்நிதி தட்டஞ் சுற்றி மண்டபத்தைப் பெருஞ்செலவில் (சுமார் ரூ. 12,000) செம்மைப்படுத்தி இத்தலத் தேவாரம், பிள்ளைத்தமிழ், தனிப்பாடல், திருப்புகழ் முதலிய வற்றை அழகாக எழுதச் செய்திருக்கின்றனர். இது இப்பொழுது சண்முகவிலாசப் பிரசாரசபா மண்டபமாக விளங்குகிறது. அது சமயப்பிரசங் கங்கள் வைத்து நடத்துவதற்கும், யாத்ரீகர்கள் வந்து தங்குவதற்கும் பெரும் உதவியாக இருக் கிறது. கோவிலுக்கே இது ஒரு அழகுதரும் நிலையிலிருக்கிறது என்னலாம்.

ரூ. 20,000க்கு மேற்பட்ட செலவில் தெற்குத் திருமதில், மேலே இராஜகோபுரத்திற்குத் தெற்குப் பகுதியிலுள்ள மேலைத் திருமதில் இவைகளைப் புதிதாக எடுத்திருக்கிறார்கள். உயரம் 22 அடி.

யானை கட்டுமண்டபம் ஒன்றும் கட்டப் பட்டது. கோவில் உட்சுற்றிலும் பல இடங்களில் பெருங்கற்கள்போட்டுத் தளவரிசை யிடப்பட்டிருக் கிறது.

ஸ்ரீமந் நடராஜருக்கும், அங்காரகனுக்கும் மஞ்சங்கள் செய்து வைத்திருக்கின்றனர். உற்சவ மூர்த்திகளுக்கெல்லாம் பீடம் அமைத்திருக்கின்றனர். அங்கு ஓர் இரும்புக்கிராதி அடைப்பும் போட்டிருக்கின்றார்கள். முடியிறக்கும் கொட்டகை ஒன்று தகரத்தால் போட்டிருக்கின்றார்கள். இராமதீர்த்தத்தையும், சீகாழி செல்லும் சாலையில் உள்ள நயினார்தோப்பு என்னுமிடத்திலுள்ள குளத்தையும் வெட்டிப் படிக்கட்டுகளும் அமைத்திருக்கின்றனர். சந்தனக்குழம்பு மண்டபத்தையும் செப்பஞ் செய்திருக்கின்றனர். சில கடைகளையும் கட்டிவிட்டிருக்கின்றனர். கட்டளைமடம் கட்டுவதற்கு அஸ்திவாரம் போடப்பட்டிருக்கிறது.

1942-ல் சித்தாமிர்த தீர்த்தத்தை நீரிறைத்து வண்டலள்ளித் தூய்மை செய்து உடைந்த படிக்கட்டுகளையும் செப்பஞ் செய்யப் பெற்றிருக்கிறது. அம்மன் சந்நிதியிலுள்ள படிக்கட்டுகள் சிறியதாக இருந்ததைப் பெரிய படிகளாகப் போட்டுத் திருப்பணி செய்திருக்கின்றார்கள். 1942ல் விஷு ஆண்டு தைமீ 6வ நீராழி மண்டபம் செப்பஞ்செய்யப்பட்டுக் கும்பாபிடேகமும் நடைபெற்றது.

தற்காலம் எழுந்தருளியிருக்கும் மகாசந்நிதானம் அவர்கள் ஆட்சி ஏற்ற பின்னர், கடன்

ரூ. 30,500 தீர்க்கப்பட்டதோடு மேற்கண்ட திருப்பணிகளும் செய்யப்பட்டன.

## 15. சமயப்பணி

திங்கள்தோறும் வரும் கிருத்திகை நக்ஷத்திர நாட்களிலும், ஏனைய விழாநாட்களிலும் ஆதீனச் சைவப் பிரசாரகர்களைக் கொண்டும், மற்றும் பல அறிஞர்களைக் கொண்டும் சமயச் சொற்பொழிவுகள் செய்விக்கப்பெறுகின்றன. நிரந்தரமாக நாடோறும் தமிழ் வேதபாராயணம் செய்வதற்குச் சிறந்த ஓதுவார் ஒருவரையும் நியமனஞ் செய்யப்பெற்றிருக்கிறது. தல புராணம் அச்சியற்றப்பெற்றுள்ளது. மேலும் தலத்தைப்பற்றிய தேவாரப்பதிகங்கள், திருப்புகழ், திருவருட்பா முதலியவைகளைத் தொகுத்துத் தனிச் சிறுநூலாக வெளியிட்டு அன்பர்களுக்கு இலவசமாக வழங்கப்பெறுகிறது. பலரும் பாராயணஞ் செய்து வேண்டியன வேண்டியாங்கு பெறுதற்குக் குமரகுருபர சுவாமிகள் அருளிய கந்தர்கலி வெண்பாவும் தனி நூலாக அச்சிடப்பெற்று வழங்கப்படுகிறது.

## 16. நிர்வாகம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீன பரிபாலனத்திற்கு உட்பட்ட தேவஸ்தானங்களுள்

ஒன்று. ஆதீன கர்த்தரவர்களாக எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் ஆதீன கர்த்தா ஸ்தானத்தை வகிக்க ஆரம்பித்ததுமுதல் (26-6-33) இவ்வாலயத்தைப் பரிபாலனம் செய்து வருகின்றார் கள்.

## 17. கல்வெட்டுக்கள்

தீர்த்தவாரி மண்டபத்தின் வடபுறம், மேற் சுவற்றில் காணப்படுவது:-

ஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1814க்குச் சரியான கரஹு ஆனிமீ 14உ தருமபுரம் ஆதீன கர்த்தர் ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவஞான தேசிகர் அருள்பெற்ற வேளூர் கோவில் கட்டளை மோ. வைத்திலிங்கத் தம்பிரான் சுவாமி அதிகாரநாளில் நாட்டுக் கோட்டை நகரத்தாறவர்கள் ஒதவியினால் கானடு காத்தான் கரு. தா. தாங்கப்ப செட்டியாறவர்கள் குமாரர்களால் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி கோபுரங் கள் உள்பட திருப்பணி செய்து தீர்த்தவாறி மண்ட பமும், அம்மன் சன்னதி மண்டபமும், நூதனமாகக் கட்டிமுடித்து ௸ தேதியில் மகாகும்ப அபிஷேக மும் நிறைவேறினது. ஸ்ரீ முத்துக்குமர சுவாமி வெள்ளி ரதமும் செய்துவைக்கப்பட்டது-வைத்திய நாதர் துணை.

***தீர்த்தத்தின் வட கரையில் கிழக்கு மேற்குப் பக்கங்களில் உள்ளவை:—***

**கிழக்கில்:-** ஸ்வஸ்தி ஸ்ரீ சாலிவாகன சகாபதம 1689 கலியுகவூ 4868 இதனமேற செலலாநினற சறுவசித்திவூ ஆவணிமீ 10வ போஸலேவம சோததராகரான ஸ்ரீ துளசாமகாராசசாயெபு அவர்களராசசிய பரிபாலனு பணணுகுற ஞளையில் மல்லாரசிகாடெராய ரவரகளுககு சீகாழிச்சீமை முகாசு நடக்கயில தரமபுரம பணடார சனனதி சிவஞான தேசிக சமமநதன அனுககிறததைப பெறற முததுககுமார சுவாமித் தம்பிரானவரகள வயிததியனுத சுவாமி கடடளை அதிகாரம பணணுகிற காறறில ரெணடாம பிறகாரமனுலு பிறதது மதளும திருமாளிகைபபறறியும அமமன சனனதி தடம சுறறி மணடபமும சாங்கமாக கருங கல திருபபணியாயி கடடி நிறவேறறி அநத திருமாளிகைப்பறறியின மெலெனுலு பிறமும வவவால நெறறி கடடி நிறவேறினது.

**மேற்கில் உள்ளது:-** ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாபதம 1692 கலியுக 4871 இதன் மேற் செல்லா நினற விகுறதிவூ வையாசி பொஸலேவஞ சொத்ரராகரான ஸ்ரீ துளசாமகாராசசாயெபு அவர்கள் ராசசிய பரிபாலனு பணணுகுற ஞளை யில ஸ்ரீ மலலாசிகாடெராயவரகளுககு சீகாழிச சீமை முகாசு நடககயில தரமபும பணடார சன

னதி சிவஞானதேசிக சமமந்தன அனுககிறததைப பெறற ஸ்ரீமுததுககுமாரசுவாமி கடடளை அதிகாரம பணணுகுற காலறறில தீரததகஞொசசாரியும சாஙகமாக கருஙகல திருபபணியாயிக கடடி நிறவேறினது.

**பெரியகொடிக் கம்பத்தின் அடியில் தென் பக்கம் உள்ளது:-** சாலிவாகன சகாபதம 1802 கலியுகாதி 4902. இதன மேற மெலலாநினற வரததமான விககிரமவரு மாசிமீ 23உ சுகர வாரம் சதுர்ததி அசுவதி நக்ஷததிரம மீனலெக கினததில தருமபுர ஆதீனம பணடார சனனதி 16-வது குரு முகுறததமாக வதரிதத ஸ்ரீ சசசிதானநதேசிக ரருளபெறற மாணிககவாசகதேசிக அனுககிறகமபெறற சோமசுநதரத தமபிரான் கடடளை அதிகாரம பணணுகுற காலததில் ஸ்ரீ வைததியஞதசுவாமி வாலாமபிகை அமமனுககு விருஷபதுஜஸதமபம கருஙகல குரடு தஙகமலாம செய்து நிரவேறியது.

## 18 புராணங்களும் பாடல்களும்

காத்தியாயனரிருப்பு வடுகநாத தேசிகர் என்பவரால் 1133 விருத்தங்கள் கொண்ட தலபுராணம் இயற்றப் பெற்றிருக்கிறது. திருஞான சம்பந்த சுவாமிகள் அருளிய பதிகம் ஒன்றும், திருநாவுக்

கரசு சுவாமிகள் அருளிய பதிகம் இரண்டும், அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ் ஆறும் உள்ளன. செல்வமுத்துக் குமாரர்மீது குமர குருபர சுவாமிகள் அருளிச்செய்த பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தமும், தருமபுர ஆதீன 10-வது மகாசந்நி தானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவஞானதேசிக சுவாமிகள் அருளிய 10 ஆசிரிய விருத்தங்கள் கொண்ட திருவருட்பா என்னும் நூலும் இருக்கின்றன. க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத்தமிழில் ஒருபாடல் காணப்படுகின்றது. மற்றும் காளமேகப் புலவர் முதலிய பல புலவர் பெருமக்கள் அவ்வப்போது பாடிய பல தனிப்பாடல்களும் உள. படிக்காசுத் தம்பிரான் பாடிய புள்ளிருக்கு வேளூர்க்கலம்பகம் என்ற பிரபந்தம் ஒன்றும் இருக்கின்றது.

திருச்சிற்றம்பலம்.

கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தங் கதிர்மதியம்
உள்ளார்ந்த சடைமுடியெம் பெருமானா ருறையுமிடம்
தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானார்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே. 1

வாசநலஞ் செய்திமையோர் நாடோறு மலர்தூவ
வீசனெம் பெருமானா ரினிதாக வுறையுமிடம்
யோசனைபோய்ப் பூக்கொணர்ந்தங் கொருநாளு மொழியாமே
பூசனைசெய் தினிதிருந்தான் புள்ளிருக்கு வேளூரே. 2

கீதத்தை மிகப்பாடு மடியார்கள் குடியாகப்
பாதத்தைத் தொழநின்ற பரஞ்சோதி பயிலுமிடம்
வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாகப்
போதத்தால் வழிபட்டான் புள்ளிருக்கு வேளூரே.

செடியாய வுடறீர்ப்பான் றீவினைக்கோர் மருந்தாவான்
பொடியாடிக் கடிமைசெய்த புள்ளிருக்கு வேளூரைக்
கடியார்ந்த பொழிற்காழிக் கவுணியன்சம் பந்தன்சொல்
மடியாது சொல்லவல்லார்க் கில்லையா மறுபிறப்பே.

திருச்சிற்றம்பலம்.

—திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள்

திருச்சிற்றம்பலம்.

ஆண்டானை யடியேனை யாளாக் கொண்டு
அடியோடு முடியயன்மா லறியா வண்ணம்
நீண்டானை நெடுங்களமா நகரான் றன்னை
நேமிவான் படையானீ ஞரவோ ருகங்
கீண்டானைக் கேதார மேவி னானைக்
கேடிலியைக் கிளர்பொறிவா ளரவோ டென்பு
பூண்டானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே யாற்றநாள் போக்கி னேனே.

இறுத்தானை யிலங்கையர்கோன் சிரங்கள் பத்து
மெழுநரம்பி னின்னிசைகேட் டின்புற் றானை
அறுத்தானை யடியார்தம் மருநோய் பாவ
மலைகடலி லாலால முண்டு கண்டம்

கறுத்தானைக் கண்ணழலாற் காம னாகம்
காய்ந்தானைக் கனன்மழுவுங் கலையு மங்கை
பொறுத்தானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே யாற்றநாள் போக்கி னேனே.

—திருநாவுக்கரசு சுவாமிகள்

திருச்சிற்றம்பலம்.

போற்றியகா தல்பெருகப் புள்ளிருக்குந் திருவேளூர்
நாற்றடந்தோ ளுடைமூன்று நயனப்பிரான் கோயிலணைந்
தேற்றவன்பெய்த வணங்கி யிருவர்புள் வேந்த ரிறைஞ்சி
யாற்றிய பூசனைசாத்தி யஞ்சொற் பதிக மணிந்தார்.

திருச்சிற்றம்பலம்.

—சேக்கிழார் சுவாமிகள்

உரத்துறை போதத் தனியான
உனைச்சிறி தோதத் தெரியாது
மரத்துறை போலுற் றடியேனும்
மலத்திருள் மூடிக் கெடலாமோ
பரத்துறை சீலத் தவர்வாழ்வே
பணித்தடி வாழ்வுற் றருள்வோனே
வரத்துறை நீதர்க் கொருசேயே
வயித்திய நாதப் பெருமாளே.

—அருணகிரி நாதர்

சந்த்ரனீ தென்னவும் பெற்றதா யென்னவுந்
தயையொடு குளிர்ந்தமுகமுந்
தழைந்ததிரு வருண்மழை பொழிந்துமல வெப்பந்
தணிக்குங்கிரு பைப்பார்வையு
மந்தமில் லாச்சச்சி தானந்த மாம்வடிவு
மழகொழுகு புன்சிரிப்பு
மத்தந் தரித்திடுசின் முத்திரையு நின்றில
கருட்குரவ ஞகியிங்கே
வந்திருந் துன்னடியை யென்முடியில் வைத்துலக
வாதனை யெலாமிறக்க
மாளாத பேரின்ப வாரியினி லாழவருள்
வாலாம்பி கைக்குமகனே
மூந்திரா மன்பணிய வந்துபுள் ளூரில்வாழ்
முக்கட் குருக்கள்குருவே
முத்தர்குரு வேயோக சித்தர்குரு வேபால
முத்துக்கு மாரகுருவே.

**ஸ்ரீ-லஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகள்**

அருளினு லுரைத்த நூலின் வழிவரா ததன்மஞ் செய்யின்
இருளுலா நிரயத் துன்பத் திட்டிரும் ப்ராவந் தீர்ப்பன்
பொருளுலாஞ் சுவர்க்கமாதி போகத்தாற் புணியந் தீர்ப்பன்
மருளுலா மலங்க டீர்க்கு மருந்திவை வயித்ய நாதன்.

**—அருணந்தி சிவாசாரியார்**

கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத்தொன் றெண்ணப்
பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால் கமழும்
மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க விரும்புமியான்
செய்கின்ற பூசை யெவ்வாறு கொள்வாய் வினைதீர்த்தவனே.

**—பட்டினத்தார்**

செவிகளொரு பன்னிரண் டுங்கேட்க வயனையுந்
தேவர்பணி யுங்குருவையுந்
தேவர்கோ னென்றசத மகனையுஞ் செந்தமிழ்சொல்
தென்பொதிய மலைமுனியையும்
புவியினக் கீரரையு மௌவையையு நீமுன்
புகழ்ந்தபொய் யாமொழியையும்
புகழ்கொண்ட வருணகிரி நாதரையும் வெகுசித்தர்
போற்றுகரு வூராரையும்
குவியுமன மருச்சிறு புலவரையும் வருபுலவர்
கொண்டாடு நல்லபகழிக்
கூத்தரையும் வளர்காசி வாழுஞ் சிவானந்த
குமாரகுரு பாமுனியையுங்
கவிசொலென் றேயடி யெடுத்துக்கொ டுத்தவன்
கனிவாயின் முத்தமருளே
கந்தனே புள்ளூரில் வந்தமுத் துக்குமா
கனிவாயின் முத்தமருளே.

—சிதம்பர முனிவர்

இளவேனின் மாலையாய்க் குளிர்சோலை யாய்மலர்
இலஞ்சிபூம் பொய்கை யருகாய்
எற்றசந் திரகாந்த மேடையா யதன்மேல்
இலங்கு மரமிய வணையுமாய்
தளவேயு மல்லிகைப் பந்தராய்ப் பால்போற்
றழைத்திடு நிலாக் காலமாய்த்
தனியிளந் தென்றலாய் நிரைநரம் புள்வீணை
தன்னிசைப் பாட லிடமாய்

களவே கலந்தகற் புடையமட வால்புடை
கலந்தநய வார்த்தை யுடனுய்க்
களிகொள இருந்தவர்கள் கண்டசுகம் நின்னடிக்
கழனிழற் சுக நிகருமே
வளவேலை சூழுலகு புகழ்கின்ற தவசிகா
மணியுலக நாத வள்ளல்
மகிழவரு வேளூரி லன்பர்பவ ரோகமற
வளர் வயித்திய நாதனே.

—இராமலிங்க சுவாமிகள்

அச்சுதற்கு மூன்றேகண் ணாயிரங்க ணிந்திரற்குப்
பத்திலக்கங் கண்ணுடைய பச்சைவடம் – நித்தநித்தம்
புள்ளிருக்கு வேளூர்ப் புராந்தகா வென்றுணியில்
எள்ளிருக்க வில்லை யிடம்.

—காளமேகப் புலவர்

சொல்வாரார் வள்ளியுடன் றோய்ந்தருண்மூத் தையனுக்கு
வல்வாரார் மானேயென் மையறனே – வில்வாய்ந்த
தெள்ளிருக்கு வேளூர் சிறுகாலுண் பானுமிசை
புள்ளிருக்கு வேளூர் புகுந்து.

—நமச்சிவாயப் புலவர்

வாராட்டு தடமுலைப் பாலொழுகி வழிவதெ‌ன
மணிமுறுவ னிலவுகாலு
மழலைவாய் முத்துண்டு முச்சிமோ ந்துதிரு
மடித்தலத் தினிலிருத்திப்
பாராட்டி யுந்தமது கண்மணிப் பாவைநின்
படிவமா கக்காட்டியிப்

பாலரொடும் விளையா டெனப்பணித் துந்தங்கள்
பார்வைகளி யாடச்செயுந்
தாராட்டு மதிமுடித் தீராத வினைதீர்த்த
தம்பிரா னுந்தம்பிரான்
தழலுருவி லொருபாதி குளிரவொரு புறநின்ற
தையனு யகியும்வைத்துச்
சீராட்டி விளையாடு சேனு பதிக்கடவுள்
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே.

—குமரகுருபர சுவாமிகள்

சுகத்திலே யிருந்துவளர் பிரமபதம் விண்டுபதஞ் சுவர்க்க மெல்லா
மிகத்திலேயின்பமல்லா லத்தனையு முத்தியென வெண்ண வேண்டா
செகத்திலே புகழ்படைத்த வேளூர ரிருபாதஞ் சேவித் தோர்கண்
முகத்திலே விழித்தாலும் போதுமையா வவர்சீவன் முத்தர் தாமே.

—படிக்காசு முனிவர்

ஞானசம்பந்தம் பதிப்பகம், தருமபுரம்.